# காரத் ஜோன்சின் மார்க்ஸ்






சிறு வெளியீடு ஏப்ரல் 2024 - ஆர் பட்டாபிராமன்

# காரத் ஜோன்சின் மார்க்ஸ்

Gareth Stedman Jones எழுதிய Karl Marx Greatness and Illusion குறித்து முகநூலில் சில பதிவுகளை தந்திருந்தேன். எகனாமிஸ்ட் பத்திரிகை இந்த ஆக்கத்தை there is no better guide to Marx என மதிப்பிட்டிருந்தது. 595 பக்கங்களில் அடர்த்தியான செய்திகளுடனான விவாதப்பரப்பு கொண்ட ஆக்கம். குறிப்புகள் ஆதாரங்கள் எனச் சேர்த்தால் 750 பக்கங்கள் கொண்ட புத்தகம். இங்கிலாந்தில் 2016ல் வந்த புத்தகம்.

மார்க்சியத்துடன் பயணிப்பவர்கள் மார்க்ஸின் வாழ்க்கை குறிப்புகளை தொடர்ந்து பல்வேறு தரப்புகளிலிருந்து தேடிக்கொண்டுதான் இருப்பார்கள்.

மூலநூலாக கருதப்படும் பிரான்ஸ் மெஹ்ரிங் 1918ல் துவங்கி மார்க்ஸ் வாழ்க்கை சரித நூல்கள் வந்துகொண்டேயிருக்கின்றன. நுணுக்கமான தகவல்களையும் தேடித்தரவேண்டும் என்ற தவிப்பில் இப்படி பல நூல்கள் வந்துகொண்டிருக்கின்றன.

டேவிட் மக்லெல்லன், வீண், ஜோனத்தன் போன்றவர் எழுதி கடந்த சில ஆண்டுகளில் வந்தவை மார்க்ஸ் குறித்த புரிதலை மேலும் விரிவாக்கின. டேவிட் மக்லெல்லன் ரிவ்யூ ஒன்றும் பார்த்தபின்னர் , அப்படி என்ன இது guide எனப் பார்க்க ஆவல் உருவானது. சில பக்கங்கள் படிக்கும்போதே , நுண்ணிய தகவல்களின் பெரும் தொகுப்பாக இருக்கிறதே என்ற எண்ணம் உருவானது. படிக்கும் போதே ஆங்காங்கே மனதில் தோன்றியவற்றை தொடர் பதிவுகளாக முகநூலில் வெளியிட்டு வந்தேன். மார்க்சிய கருத்துக்கள் என்பதைவிட, மார்க்சிய குடும்பம், வாழ்க்கை குறித்த செய்திகளைத் தர எண்ணினேன். மார்க்சை பேசும்போது அவரின் அறிவார்ந்த வளர்ச்சிப் பாதையை தொடாமல் பேசமுடியாது. ஆங்காங்கே அதன் சில குறிப்புகளையும் ஓரிரு இடுகைகளில் தந்துள்ளேன்.

இந்த முகநூல் இடுகைகள் 700 பக்கத்திற்கு மேலான காரத் ஜோன்ஸ் புத்தகம் குறித்த முழுமையோ, மார்க்ஸ் வாழ்க்கை குறித்த விரிவோ அல்ல. இங்கும் அங்குமாக படிக்கும் போது, சொல்லலாமே எனத் தோன்றிய சில செய்திகள் தான்.

இடுகைகள் தனித் தனி நாட்களில் இருந்ததை தொகுத்தபோது, சிறு பிரசுரம் அளவிற்கு வந்ததைக் காணமுடிந்தது. அப்படியே சிறு மின் பிரசுரமாக வைத்துவிடலாம் என நினைத்து இங்கு இடுகைகளின் தொகுப்பு வைக்கப்பட்டுள்ளது. மே 2023வரையிலான ஜோன்சின் மார்க்ஸ் பற்றிய இடுகைகள் இதில் அடுக்கப்பட்டுள்ளன.

மார்க்ஸ் குறித்த எளிய சிறு அறிமுக essay என்கிற வகையில் இந்த பிரசுரம் பயன்படுமெனில் மகிழ்ச்சி.

20-4-2024 - ஆர். பட்டாபிராமன்

காரத் ஸ்டெட்மேன் ஜோன்சின் மார்க்ஸ்

(Karl Marx Greatness and Illusion by Gareth Stedman Jones).

மார்ச் 30, 2023 முகநூலில் மார்க்ஸின் தந்தை குடும்பம் பற்றிய சிறு இடுகை செய்திருந்தேன். நூல்களை படிக்கும்போது, வேறு சிலருக்கும் அது குறித்த செய்தி அல்லது கருத்தாக்கம் செல்லட்டுமே எனத்தோன்றுபோது, இடுகையை செய்து வருகிறேன். இந்த ஸ்டெட்மேன் ஜோன்ஸ் நூல் குறித்தும் தோன்றும்போது செய்யவே சித்தம்.

மார்க்ஸின் தாயார் குறித்து செய்திகள் குறைவாகவே இருந்து வருகின்றன. குடும்பத்தை பராமரித்தார், மார்க்ஸ் உடல்நலம் குறித்து கவலைப்பட்டார், கிறிஸ்துமஸ் காலத்தில் தின்பண்டங்களை அனுப்புவார், கடைசி காலங்களில் மார்க்ஸ் தாயுடன் முரண்பட்டார் என்ற செய்திகள் பொதுவாக கிடைக்கும். ஸ்டெட்மேன் புத்தகத்தில் வேறு சில தகவல்கள் தரப்பட்டுள்ளன.

தாயார் ஹென்ரிட்டே நெதர்லாந்தில் வளர்ந்தவர். டச்சு சூழல். ஜெர்மானிய மொழியை தன் வட்டார உச்சரிப்பில் கொஞ்சம் பேசக்கூடியவர். ஹெயின்ரிச்சிற்கு வாக்கப்பட்டு 9 குழந்தைகளை ஈன்றவர் . மகன் மௌரிட்சை அவனது 4வது வயதில்-1819ல், எட்வர்ட் 11 வயதில் 1837ல், ஹெர்மானை 23 வயதில் 1842ல், ஹென்ரியட்டேவை 25 வயதில் 1845ல், கரோலினை 25 வயதில் 1847ல் அத்தாய் பறிகொடுத்தாள். இவ்வளவு இழப்புகளும் பெற்ற அவள் உள்ளத்தை நோகச்செய்திருக்கும். அத்தாய்க்கு மார்க்ஸ் உடன் மூன்று சகோதரிகள் சோபி 1816-1886, லூசி 1821-93, எமிலி 1822-1888 எஞ்சினர்.

மார்க்சின் சகோதரி சோபி தனது தாயாரை small, delicate and very intelligent எனச் சொல்லியிருக்கிறார். ஒருமுறை ஹாலந்த் சென்ற மார்க்ஸிடம் எனது ஊர் எவ்வளவு ரம்மியமானது பார்த்தாயா என மனம்பூரிக்க தாயார் கேட்டுள்ளார். தனது குழந்தைகள் திருமணமாகி பல இடங்களுக்கு சென்றபோது தனது சகோதரிக்கு மார்க்ஸின் தாய் இப்படி எழுதினாராம்

It seems that the fate of the people of Israel is one again being fulfilled in my case and that my children are to be scattered throughout all the world.

மகள் லூசி மணம் முடித்து தென்னாப்பிரிக்கா செல்கிறாள் என்ற நிலையில் வந்த வரிகள் அவை. கார்ல் தனது பதின்ம வயதில் பான் பல்கலை சென்றபோது behaviour, values, career மீது கவனமாக இரு எனத் தாய் அறிவுறுத்தினார். பெரும்பாலும் அவர் நல்கியவை நடைமுறை சார்ந்த அறிவுரைகளத்தான். காபி போட்டுக்குடி, ஸ்வெட்டர் போடு, ஜலதோஷம் பிடிக்க விடாதே, பாட்டி வைத்தியங்களை சொல்கிறேன் கேள்.. குழந்தைகளுக்கு ஒன்று என்றால் பெற்றோர் தாங்கமாட்டார்கள் என்பதை புரிந்துகொள்..இப்படித்தான் அவரது அறிவுரைகள் சென்றன.

தாய்க்கு 5வது பெண் ஹென்ரியட்டெ. அவள் உடல் சுகவீனமின்றி தொடர் இருமலுடன் இருந்தாள். வீட்டில் மணப்பேச்சு எழுந்தது. இது குறித்து மார்க்சின் காதலி ஜென்னி மார்க்ஸ்க்கு கடிதம் எழுதினார். அப்பெண்ணின் திருமணத்தை தியோடர் சிமோன்ஸ் என்பாருடன் நடத்த முடிவெடுத்தனர். உடல்நலம் குன்றியவளை மணமுடித்து நகரத்தில் வைக்காது கிராமத்திற்கு அனுப்புதல் நியாயமா என்ற உணர்வு ஜென்னிக்கு. Tuberculosis உள்ள அந்த பெண்ணை ஆகஸ்ட் 20, 1844ல் மணமுடித்தனர். ஆனால் ஹென்ரியட்டே ஜனவரி 3, 1845ல் மறைந்தார். மார்க்ஸ்க்கும் chest infections இருந்தது.

பார்க்கலாம்..மார்க்ஸின் பிறந்த ஊரான டிரயரில் அவரது பள்ளிப்பருவம் பற்றி இந்த புத்தகம் என்ன சொல்கிறது என்பதை…

## 2

கார்ல் மார்க்ஸின் தந்தையார் ஹெயின்ரிச் மார்க்ஸ் (1777-1838) யூத குடும்ப வழி வந்தவர். தனது சட்டத்தொழிலுக்கு பாதுகாப்பிற்கான சூழலை உருவாக்கிக்கொள்ள அவர் கிறிஸ்துவத்திற்கு மாறவேண்டிய நிலை ஏற்பட்டது. மார்க்சின் தந்தைவழி தாத்தா மெயிர் ஹாலவி மார்க்ஸ். அவர் மார்க்ஸ் பிறந்த டிரயர் ஊருக்கு யூத குருமாராக rabbi வந்தவர். ஹாலவியின் மற்றொரு மகன் சாமுவேல் மார்க்ஸ்- அவரும் ராபி குருமார்.

மார்க்ஸின் தாயார் ஹென்ரியட்டே ( 1788-1863) ஹெயின்ரிச்சை 1814ல் மணமுடித்து 9 குழந்தைகளை பெற்றவர். மார்க்ஸின் தந்தை மறைவிற்குப் பின்னர் 25 ஆண்டுகள் வாழ்ந்தவர்.

நெப்போலியன் பிரஞ்சு வசம் ஊர் வந்தவுடன் , யூதர்கள் கந்துவட்டி வியாபாரம் கூடாது. வேறு தொழிலுக்கு போகவேண்டும் என்ற கட்டளை வந்தது. ரைன்லாந்த் பகுதி பிரஞ்சு கட்டுப்பாட்டிற்கு போனது. நெப்போலியனுக்கு யூதர்கள் மீது நல்லெண்ணம் இல்லை.வால்டேரின் வாக்கியம் அவரிடம் பதிந்தது.

The Jews are a vile people, cowardly yet cruel.

சாமுவேல் மார்க்ஸ் மற்றும் 71 யூதகுருமார் ராபிகள் நெப்போலியனால் பிப்ரவரி 9, 1807ல் பாரிசுக்கு அழைக்கப்பட்டு அவரின் எதிர்ப்பார்ப்புக்களை அறிய வைக்கப்படுகின்றனர். பிரஞ்சு சட்டத்திற்கு மாறாக எதுவும் கூடாது என்ற அறிவுறுத்தல் செய்யப்படுகிறது. நெப்போலியன் தனது பாலிசி எனச் சொன்ன வரிகள்

The people must have a religion; this religion must be in the control of the government..My policy is to govern men as majority wish to be governed. That is the way I believe, in which one recognises the sovereignty of the people. If I ruled the people of Jews, I would rebuild the Temple of Solomon

நீங்கள் தேசபக்தி, திருமணமுறைகள், கந்து வட்டித்தொழிலை விடுதல், அரசின் அதிகாரத்தை மதித்தல் போன்றவற்றில் கவனமாக இருங்கள். அரசாங்க வேலையில் இருப்பவர் தொடர முடியும் என்ற நம்பிக்கையும் தரப்பட்டது.

சாமுவேல் மார்க்ஸ் யூத இளைஞர்களிடம் வேறு தொழில்களுக்கு மாற அறிவுறுத்துகிறார். பிறகு டிரயர் பிரஷ்யாவின் ஆளுகைக்கு மாறுகிறது. பிரஷ்ய சட்டங்கள் வந்தன.

மார்க்ஸின் தந்தை புதிய அரசிற்கு முந்திய நெப்போலியன் யூத விரோத சட்டங்களை மாற்ற 1815 ஜூனில் கடிதம் எழுதுகிறார். அவர் Prussian Evangelical Church ல் baptised - அப்படி நடந்ததற்கான ஆதாரம் ஏதும் இல்லாமல் போனது. இருந்தாலும் அவர் lawyer ஆக நீடிக்க பிரஷ்யா சர்க்கார் அனுமதித்தது.

மார்க்ஸின் தந்தை shared many values of liberals..வால்டேரும் ரூசோவும் மனப்பாடம் என அறிகிறோம். மார்க்ஸின் தந்தை ஜனவரி 13, 1834ல் social club ஒன்றில் 160 விருந்தினர் முன்னிலையில் ஆற்றிய வரவேற்புரையில் கீழ்கண்ட வாசகமும் இருந்தது.

The truth should reach to the steps of throne..where indeed should truth lead us, if not there?..where justice is enthroned, there also must truth make its appearance

டிரயரில் இருந்த ஜிம்னாசியம் என்கிற வகைப்பட்ட பள்ளியில் தனது 12 வயதில் 1830ல் கார்ல் சேர்க்கப்பட்டார். பல்கலைக்கு முன்னரான பள்ளி முறையான செகண்டரி எஜுகேஷன் அங்கு இருந்தது. அங்கு பான் பல்கலைக் செல்வதற்கு முன்னர் இந்த ஜிம்னாசியத்தில் 1835 வரை மார்க்ஸ் படித்தார்.

அவரது வகுப்பில் 25 கத்தோலிக்க மாணவர்கள், 15 புரோடெஸ்டெண்ட் இருந்தனர். யூதர்கள் என எவரும் பதிவாகியிருக்கவில்லை. தலைமை ஆசிரியர் என்ற பொறுப்பில் ஜோகன் வைட்டன்பாக் ஊர் அறிந்தவராக இருந்தார். அவர் reason and free will குறித்து போதித்தார். ஜெர்மானிய ஆரம்ப பாடங்களை தொகுத்தவர் எனப் பெயர் பெற்றார். கதே, ஷில்லர் போன்ற கவிஞர்களை சொல்லிக்கொடுத்தவர்.

மார்க்ஸின் ஷீனிமான் என்கிற ஆசிரியர் சற்று கலகக்காரராக அறியப்பட்டார். கணித ஆசிரியர் ஸ்டெயினிங்கர். கார்ல் ஜெர்மன், லத்தீன், கிரேக்கம், வரலாறு, இலக்கியத்தில் தேர்ச்சி உடையவராக இருந்தார். ( எனது பள்ளி ஆசிரியர்கள் பேர்களில் பலர் பெயர் நினைவில் இல்லை என்பது தனிக்கதை)

பள்ளிக்காலத்தில் 16 வயதில் மார்க்ஸின் choice of profession essay பலராலும் பாராட்டப்பட்ட ஒன்று. அவரின் வகுப்பு மாணவர்கள் சிலரும் சிறப்பாக எழுதிய செய்தியும் இருக்கிறது. அந்த essayல் மார்க்ஸ் எழுதிய இந்த வரிகள் பல மார்க்சியர்களால் எடுத்தாளப்பட்டுள்ளன. மார்க்ஸ் அப்படியெல்லாம் மார்க்சியம் ஒன்றை தன் பெயரால் உருவாக்கப்போகிறோம் என்றெல்லாம் அந்த வயதில் நினைத்திருக்க முடியாது.

The chief guide which must direct us in the choice of a profession is the welfare of mankind and our own perfection..for a man's nature is constituted that he can attain his own perfection only by working for the perfection, for the good of his fellow men

இந்த வரிகளில் welfare of mankind and our own perfection என சுய பூரணத்துவ தேடலையும் அந்த மாணவ மார்க்ஸ் சொன்னதைப் பார்க்கிறோம். ஆசிரியர்களின் கற்பித்தவையும் காரணமாகின்றன. Our own perfection என்பதற்கு அவர் வைத்த

அளவுகோல்கள் என்ன, அதில் அவர் வாழ்க்கையில் தேறினாரா என்பதை இதுவரை படித்த இந்த புத்தகத்தில் காணக்கிடைக்கவில்லை.

சட்டம் படிக்க பான் நகரம் செல்கிறார் கார்ல். அங்கிருந்து 1836 ஆகஸ்டில் பெர்லின் படிக்க செல்கிறார். அவருக்கு கொடுக்கப்பட்ட certificate of releaseல் தடைசெய்யப்பட்ட மாணவர் இயக்கத்தொடர்பு ஏதுமில்லை- rowdiness drunkenness at night- having carried prohibited weapons in cologne என்ற குறிப்புகள் இடம்பெற்றன. பான் படிப்பில் 6 பிரிவுகளை அவர் எடுத்திருந்தார். ரோமன் சட்ட வரலாறு, சட்ட என்சைக்ளோபீடியா,சட்ட நிறுவனங்கள், கிரேக்க ரோம புராணங்கள், ஹோமர், நவீன கலை என்பன அவை. பொதுவாக diligent and attentive என்ற குறிப்புகள் கிடைத்தன.

## 4

1836ல் ஜென்னி மீதான காதல் அவரிடம் உறுதியானது. 1837 நவம்பரில் அப்பாவிற்கு எழுதிய கடிதம் ஒன்றில் காதல் எனும் புதுவுலகில் நுழைந்துள்ளதை அவர் தெரிவிக்கிறார். பெர்லின் காலத்தில் மூன்று வால்யூம் கணக்கில் அவர் காதல் கவிதைகளை எழுதினாராம். Book of Love , Book of Songs எனப் பெயர் பெற்றன அவை. ஜென்னி சகோதரன் எட்கர் மார்க்ஸ் பள்ளித்தோழன். வாழ்நாள் முழுதும் பின்னர் மார்க்சை நேசித்தவர். எட்கருக்கும் மார்க்ஸ் சகோதரி ஒருவர் மீது கண் இருந்ததாம்.

இனி ஜென்னி யார் எனப்பார்ப்போம்.

வெஸ்ட்பாலன் குடும்பம் அரசாங்க அதிகார உத்யோகஸ்தர் குடும்பம். ஜோகன் லூத்விக் வொன் வெஸ்ட்பாலன் ஜென்னியின் தந்தை. அவருக்கு ஆங்கிலம், லத்தீன், கிரேக்கம், இத்தாலியன், பிரஞ்சு, ஸ்பானிஷ் மொழிகள் தெரியும் . அவரின் முதல் மனைவி எலிசபத் வொன் வெல்தீம். இவர்களுக்கு பெர்டினாண்ட், லூசி, கார்ல், பிரன்சிஸ்கா பிறந்தனர். இரண்டாம் மனைவி கரோலின் ஹியுபெல். இவருக்கு ஜென்னி 1814லும், லாரா 1817ல், எட்கர் 1819ல் பிறந்தனர்.லாரா 4 வயதிலேயே மறைந்தாள்.

இரு துணைவியார்களின் சமூக அந்தஸ்தில் இருந்த ஏற்றத்தாழ்வுகள் குடும்பத்தில் பிரதிபலித்த செய்திகளைக் காண்கிறோம். ஜென்னி அவ்வூரின் அழகுப்பெண். 17 வயதில் இராணுவப்பணி அதிகாரி ஒருவருக்கு நிச்சயமானாலும் திருமணம் வரை அது போகவில்லை.

கார்ல் உள்ளத்தை ஜென்னி வசீகரித்தார். கார்ல் விட 4 வயது மூத்தவர் ஜென்னி. அது பிரச்னையா என்னவென கார்ல் சகோதரி , ஜென்னியின் தோழி சோபி உற்சாகமூட்டினாள். கார்ல் வீட்டிற்கு தெரிந்த காதல், வெஸ்ட்பாலன் வீட்டிற்கு தெரியாமல் இருந்தது. ஜென்னியின் சகோதரன் எட்கர், மார்க்ஸின் சகோதரி ஒருவரை நேசித்த செய்தியும் இதில் இடம்பெற்றுள்ளது.

Salzwedel எனும் பகுதியில்தான் ஜென்னி பிறந்துள்ளார். அங்கு நெப்போலியனுக்கு விரோதமாக பேசினார் என்பதற்காக வெஸ்ட்பாலன் கைது செய்யப்பட்டார். பின்னர்தான் அவர் டிரயர் நகருக்கு மாற்றப்பட்டார். தனது எதிர்கால மாமனார்

வெஸ்ட்பாலனுடன் மார்க்சிற்கு நல்லுறவு இருந்தது. நடை பயிற்சியில் அவரிடம் ஏராளம் மார்க்ஸ் கற்ற செய்தியை பலரும் பதிவிட்டுள்ளனர்.

மார்க்ஸின் தந்தை இருந்தவரை இரு குடும்பத்தாருக்கும் நல்ல உறவு இருந்துள்ளது. அதற்கு பின்னர் முகம் கொடுக்காமல் திருப்பிக்கொண்டு இருந்துள்ளனர். ஜென்னி சென்றால் மார்க்ஸின் தாய் முகம் கொடுக்க மாட்டார். வெஸ்ட்பாலன் வீட்டு துக்கம் ஒன்றை விசாரிக்கச் சென்ற மார்க்ஸ் வீட்டாருக்கு அவர்கள் முகம்கொடுக்காமல் துயர் உருவாக்கிய செய்தியிருக்கிறது.

இதையெல்லாம் தாண்டி தான் ஜென்னி தன் காதலன் மார்க்ஸ் எப்போது கைப்பிடிக்க வருவான் என காத்திருந்தார். ஜென்னி பள்ளிச் சென்றாரா, முறையான கல்வி இருந்ததா எனச் செய்தி இல்லை. வீட்டில் புத்தகங்கள் படித்தது, மார்க்சிடம் என்ன புத்தகம் படிக்கலாம் எனக்கேட்ட செய்திகள் கிடைக்கின்றன. மார்க்ஸ் தந்தையிடம் அவ்வப்போது பல்வேறு கருத்து பரிமாற்றங்களை ஜென்னி செய்துள்ளார். அப்பெண் உனக்காக தியாக உருவமாக காத்திருக்கிறாள் என தன் பிள்ளை மார்க்சிற்கு தந்தை அனுப்பிய செய்தி உள்ளது.

5

மார்க்சின் கல்லூரி கால பெர்லின் வாழ்க்கையில் அவர் வீட்டிற்கு அடிக்கடி கடிதம் எழுதுவதே இல்லை என்ற புகார் பெருமளவில் இருந்தது. பணக்கார மாணவர்களே அன்றைய பிரஷ்யாவின் தாலர்களில் 500 செலவழித்தால், மார்க்ஸ் 700 தாலர் செலவழித்தார் என தந்தை வருத்தத்தை வெளிப்படுத்தினார். தந்தை இப்படி அறிவுரையை எழுதினார்

The first of all human virtues, is the strength and will to sacrifice one self, to set aside one's ego, if duty, if love calls for it..it is those daily and hourly recurring sacrifices which arise from the pure heart of a good person..that give life a sole charm and make it beautiful

சகோதரி சோபியும் ஏதோவொரு நேரத்திலாவது கடிதம் எழுதக்கூடாதா எனக் கேட்டுள்ளார்.

1830-40 களில் ஜெர்மனியில் தீவிரவாதம், ரிபப்ளிகனிசம், சோசலிசம் பற்றிய உரையாடல்கள் பெருகின. ஹெகலின் தாக்கத்தில் இளம் குழுவினர் கருத்துபுலத்தில் செயல்பட்டனர். 1841ல் புருனோ பாயருடன் மார்க்ஸ் நட்பு கூடியது. 1842ல் பாயரின் கல்லூரி ஆசிரியர் வேலை நீக்கம், வெஸ்ட்பாலன் மறைவு எனும் இரு நிகழ்வுகள் நடந்தேறின.

மார்க்ஸ் தாயிடம் தனக்கான சொத்தை பிரித்து தர வேண்டினார். தாயார் அதற்கு உடன்படவில்லை. 1841ல் காத்திருந்த ஜென்னி dearest Karl, please say will I yet become wholly yours…உனது காதலைத்தவிர என்னிடம் ஏதும் இல்லை என தன் துயரை வெளிப்படுத்தினார்.

மார்க்ஸ் சட்டப்படியான ஆட்சிமுறை, மதத்தின் பங்கு, ஹெகலின் ஆய்வுகளில் மூழ்கியிருந்தார்.

பாயர் தன் ஆய்வில் வரலாற்று வளர்ச்சியை மூன்று தருணங்களாக விளக்கினார். The moment of substantiality- in which thought was not distinguished from being

Second moment - Religious consciousness- in this the subjectivity was not located in humanity, but in alien other worldly domain. In the alienated world of religious consciousness, mankind perceived its own deeds as those of another.

The third moment- that of enlightenment and French Revolution, free self consciousness enabled to grasp its world as its own creation.

எனவே அரசியல் கடமை இன்றுள்ள தருணத்தை epoch of revolution முன்னெடுப்பதுதான் என்றார் பாயர்.

ரூகே , பாயர், பாயர்பாக் போலவே இளம் ஹெகலியராக மார்க்ஸ் 1842ல் republican position எடுத்தார். கிறிஸ்துவ அரசுக்கு மாற்றான உண்மை அரசு என்பதைப் பேசினார். பத்திரிகை சுதந்திரம் வலியுறுத்தினார். கிறிஸ்துவத்தை நிலப்பிரபுத்துவ fetishism எனப்பார்த்தார். Christian state was not a free association of moral human beings, but an association of believers' என்றுஎழுதினார். சட்டப்படியான ஆட்சிதான் people's bible of freedom என்றார்.

அரிஸ்டாட்டிலின் அரசு இரு பிரிவுகளைக்கொண்டது. ஒன்று சிட்டிசன் உரையாடலுக்குரிய பொதுவெளி polis மற்றது household, family, habitat of women , slaves, the site of material production viz OIKOS என அரிஸ்டாட்டில் சொல்லிக்கொடுத்தார். இதில் ஹெகல் மூன்றாவது பிரிவொன்றைச் சேர்த்தார் . அவர் சொன்னது civil society- a space opened up between family and formal constitution of the state. இதனால் சுயேட்சையான சிவில் ஊழியர்கள் குறித்தும் அவர் உரையாடினார்.. the creation of civil society belonged to modern world..இதை ஆடம்ஸ்மித் commercial society என விவரித்தாராம்.

ஹெகலின் மாணவராக பாயர்பாக் 1828ல் the Christian idea of the immorality of the soul originated as a replacement for the ancient idea of citizen எனக் குறிப்பிட்டார். ரூசோ வணிகமும் மதமும் தேசபக்தியை வீழ்த்திவிட்டன என்றாராம்.

மதம் குறித்த விமர்சனம் எப்படி இருக்கவேண்டும் என மார்க்ஸ் 1842 ல் எழுதியது

Religion should be criticised in the framework of criticism of political conditions rather than political conditions should be criticised in the framework of religion

For religion is without content, it owes its being not to heaven, but to earth, and with the abolition of distorted reality, of which it is the theory, it will collapse itself

அடுத்து பார்ப்போம் மார்க்ஸ் ஜென்னி திருமணத்தை… அவர் கம்யூனிச தாக்கம் கொண்டவராக மாறுவதை…

6

முன்னரான 5 பதிவுகளில் மார்க்ஸ் தாய் தந்தை குடும்பம் பள்ளிக்கூடம் , ஜென்னி , ஆரம்ப சிந்தனைகள் குறித்த சில செய்திகளை கொடுத்திருந்தேன்.

கார்ல் பத்திரிகைகளில் எழுதுபவராக, எடிட்டராக தன் சோதனைகளை நடத்தினார். கார்ல் மார்க்ஸ் ரெயினிஷ் ஜெய்துங் சோதனையும் 1843ல் நின்றது. இந்தப் பத்திரிகை காலத்திலேயே அவரது பெர்லின் நண்பர்களுடன் வேறுபாடுகள் உருவானது. இந்த அனுபவங்களை அவர் ரூகேவுடன் பகிரும்போது

I have become tired of hypocrisy, stupidity, gross arbitrary ness, and of our bowing and scraping , dodging and hair splitting over words. Consequently the government has given me back my freedom என எழுதினார்.

1844 ல் ரூகே, பாயர் ஆகியவர்களிடமிருந்து மார்க்ஸ் பிரியவேண்டிவந்தது. மார்க்ஸ் ரிபப்ளிகன் சிந்தனையிலிருந்து கம்யூனிச சிந்தனை நோக்கி நகரலானார். ஹெகலை தாண்டி செல்லவேண்டியது குறித்து பாயர்பாக் சொல்வதை அவர் உணர்ந்தார். சமூக பிரச்னை, உழைப்பு, உற்பத்தி, பாட்டாளி கருத்தாக்கங்களில் தீவிர சிந்தையை செலுத்தலானார்.

ரெயினிஷ் பத்திரிகையிலிருந்து விடுவித்துக்கொண்ட கார்ல் தனது காதலி ஜென்னியும் அவரது தாயாரும் இருந்த kreuznach நகருக்கு சென்றார். மார்க்ஸின் டிரயர் நகரிலிருந்து 80 கி மீ தூரத்தில் இருந்தது அந்நகர். Riesling and Sivaner வகை திராட்சை தோட்ட ஊராக இருந்ததாம். கரோலின் தன் மகள் ஜென்னியுடன் கணவர் வெஸ்ட்பாலன் மறைவிற்கு பின்னர் சில பொருளாதார காரணங்களுக்காக அங்கு செல்ல நேர்ந்ததாம்.

ஜூன் 19, 1844 அன்று மார்க்ஸ் ஜென்னி திருமணம் St Paul Church கிருயிஷ்னா Preacher ஆல் அங்கேயே நடத்தி வைக்கப்பட்டது. மார்க்சின் வகுப்புத்தோழன் ஒருவர் வந்திருந்தாராம். மார்க்ஸின் தாயார் தனது எழுத்துபூர்வ ஒப்புதலை - written consentயை அனுப்பியிருந்தார். நேரில் வரவில்லை. அந்நகரில் மணமக்கள் செப்டம்பர்வரை இருந்தனர். அக்டோபரில் இருவரும் பாரிஸ் சென்றனர். அவர்கள் தேன் நிலவு காலத்தில் 40 புத்தகங்கள் மற்றும் குறிப்பெடுக்க கட்டு

நோட்டுகளுடன் மார்க்ஸ் சென்றார் என்ற செய்தியும் வேறு புத்தகங்களில் நமக்கு சொல்லப்படுகிறது.

கிருயிஷ்னாவில் மார்க்ஸ் ஹெகலின் Philosophy of Right குறித்த விமர்சனத்தை தயார் செய்துகொண்டிருந்தார். முன்னதாக பாயர்பாக் Preliminary Theses on the Reform of Philosophy என ஹெகல் வாசிப்பு ஒன்றை செய்திருந்தார். 1840 லேயே பாயர்பாக் தனது Essence of Christianity மூலம் சிந்தனை வட்டத்தில் புகழடைந்தவர். இந்த புத்தகம் குறித்த வகுப்புகளை பிரஸ்ஸல்சில் பின்னர் மார்க்ஸ் அங்கிருந்த ஜெர்மானிய தொழிலாளர்களுக்கு எடுத்தார்.

பாயர்பாக் இவ்வாறு spicies being குறித்து எழுதினார்

Man in nature was both active and passive. Man embodied reason and freedom, but was first a sensuous being..the first object of man is Man. As a creature of need, man depended on others. In this sense he was a communal being.

The essence of the starting point of man was not the self, but the unity of I and Thou. Man came to consciousness of his humanity, of his species being, through the agency of other men.

ஹெகல், பிக்டே பேசிய I or self in isolation என்பதற்கு மாற்றாக two human beings are needed for the generation of man என்கிற பாயர்பாக் கருத்தாக்கம் தெளிவைக்கொடுத்தது.

மார்க்ஸ் அரசியல் அரசு என்பதில் மனிதன் இரண்டு அம்சங்களைப் பெறுகிறானென்றார். In the political community himself a communal being and in civil society he acts as a private individual. அதேபோல் மதம் பற்றி பேசும்போது we no longer regard religion as the cause but only as the manifestation of secular narrowness எனக் குறிப்பிட்டார். அரசு மதத்திலிருந்து பெறும் விடுதலை, மனிதன் மதத்திலிருந்து பெறும் விடுதலையாகாது என்பதை புருனோபாயர் புரிந்துகொள்ளவில்லை என்ற விமர்சனத்தை பாயர்பாக் செல்வாக்கில் மார்க்ஸ் வைத்தார்.

பிரிட்டன், பிரான்சில் வளர்ந்த அளவு தொழிலாளர் இயக்கம் ஜெர்மனியில் 1840களில் வளரவில்லை. பிரான்சில் கம்யூனிச சிந்தனைகள் குறித்த உரையாடல்கள் பெருகியிருந்தன. லூயி பிளாங்கின் Organisation of Labour, புருதான்

எழுதிய what is property வந்தன. சோசலிசம், கம்யூனிசம், தொழிலாளர் துயர்கள் ஆகியவற்றை பின்னிய வகையில் உரையாடல்கள் பிரதிகள் எழுந்தன.

1843ல் வைட்லிங்கின் Guarantees of Harmony and Freedom வந்தது. மோசஸ் ஹெஸ் European Triarchy என்கிற Germany the land of Reformation to realise spiritual freedom, France land of Revolution to attain political freedom, England the land of social revolution to bring social equality என்கிற மூன்றின் இணக்கம் பற்றிப் பேசினார்.

மார்க்ஸ் 'கம்யூனிசம் ' எனச் சொல்வது வெறும் விமர்சன கருத்துரையாஅல்லது சமூக இயக்கமா என்பதை விவாதிக்கலானார். அவர் இவ்வாறு எழுதினார்.

The real danger lies not in practical attempts, but in the theoretical elaboration of communist ideas, even mass attempts can be answered by cannon as soon as they become dangerous, whereas ideas, which have conquered our intellect and taken possession of our minds were chains from which one cannot free oneself without a broken heart.

பாயர்பாக்கை வியந்து பிராங்கோ ஜெர்மன் அறிவியல் கூட்டணியின் தேவையை உணர்த்திய முதல் எழுத்தாளர் அவர் என மார்க்ஸ் அப்போது எழுதினார்.

மோசஸ் ஹெஸ் தனது On the Essence of Money என்கிற ஆக்கத்தில் இவ்வாறு எழுதினார்

Money had become the alienated wealth of man, the bartering away of man's activity.

மேலும் பார்க்கலாம்..பாரிஸ், பிரஸ்ஸல்ஸ் வாழ்க்கை கம்யூனிஸ்ட் மானிபெஸ்டோ நோக்கி மார்க்ஸ் எப்படி நகர்ந்தார் என்பதை..

# 7

முன்னரான 6 பதிவுகளில் மார்க்ஸ் தாய் தந்தை குடும்பம் பள்ளிக்கூடம் , ஜென்னி , திருமணம் , பத்திரிகை அனுபவம் குறித்த சில செய்திகளை கொடுத்திருந்தேன்.

மார்க்ஸ் பாரிஸ் நகருக்கு அக்டோபர் 1843ல் வந்தார். லண்டனுக்கு அடுத்த புகழ் வாய்ந்த அய்ரோப்பிய நகரம். மக்கள்தொகை ஒரு மில்லியனுக்கு சற்று அதிகமாக இருந்திருக்கலாம். 60 ஆயிரம் ஜெர்மானியர்கள் அப்போது அங்கு இருந்தனராம். அவர்களில் பலர் செருப்புத்தொழில், கைத்தொழில், ஆசிரியர், தையல் தொழிலாளர்கள் என்ற வகையில் வாழ்ந்தனர். அங்கு சற்று கூடுதல் ஊதியம் கிடைக்கும் என வந்து தங்கியவர்கள்.

பிரான்சில் அப்போது பெரும் தொழிற்சாலைகள் இல்லை. 50 சத நிறுவனங்கள் ஓரிரு தொழிலாளர்களை வைத்தே நடந்தன. 10 சத நிறுவனங்களில்தான் 10 தொழிலாளர்களுக்கு மேலாக இருந்தனர்.

1833ல் சோசலிசத்திற்கான நவீன புரிதலை Pierre Leroux தந்தார். அவரும் Religious Democracy என்பதை பேசி வந்தவர்தான். Philippe Buchez என்பவர் கிறிஸ்துவம் பேசும் சமத்துவத்தை சோசலிச வகைப்பட்டே எட்டலாம் என உரையாடினாராம். Cabet கிறிஸ்துவத்தின் நடைமுறையையே தான் கம்யூனிசம் எனச் சொல்வதாக போதித்தார். இப்படி கிறிஸ்துவ பார்வையில் சமத்துவம் பேசிய பலரது சிந்தனைகள் வெளிவந்திருந்தன.

இப்படி கம்யூனிசக் சோசலிசம் உரையாடல் நிரம்பிய பாரிஸ்க்கு மார்க்ஸ் ஜென்னியுடன் வந்தார். ஆரம்ப நாட்களில் ரூகே, ஹெர்வே, மார்க்ஸ் மூன்று குடும்பமும் social community வாழ்க்கையை கூட்டாக சோதித்தனர். துணைவியார்களிடம் ஏற்பட்ட வேறுபாட்டால் அச்சோதனை சில நாட்களிலேயே நின்றது.

மார்க்ஸ் தனது Jewish Question ஆக்கத்தில் புதிய உலகத்திற்கான கோட்பாடு எதையும் யூதமதம் தராது. ஆனால் அதிலிருந்து வந்த கிறிஸ்துவத்தில் அரசு என்பதிலிருந்து சிவில் சமூகத்தை பிரித்துக்காண முடியும் என எழுதினார்.

Political emancipation could not emancipate the Jew. Only human emancipation- emancipation from huckstering and money would make Jew impossible என மார்க்ஸ் விமர்சிப்பதை ஜோன்ஸ் சுட்டிக்காட்டுகிறார்.

1844ல் பாட்டாளிக்கும் சோசலிச தத்துவத்திற்குமான உறவை அவர் கட்டுவதைக் காணலாம்.

The emancipation of the German is the emancipation of the human being. The head of the emancipation is philosophy; its heart is the Proletariat...

..as philosophy finds its material weapons in the proletariat, so the proletariat finds its spiritual weapons in philosophy என்கிற இணைப்பை அவர் கட்டுமானம் செய்வதைப் பார்க்கலாம்.

மார்க்ஸ்க்கு அங்கு கவிஞர் ஹெயின்ரிச் ஹெயின் தோழராக இருக்கிறார். கைக்குழந்தையான ஜென்னிக்கு strong cramps வந்தநேரத்தில் அக்குழந்தையை உடன் குளிப்பாட்டி கைவைத்தியத்தில் ஹெயின் காப்பாற்றிய செய்தியை ஜோன்ஸ் எழுதுகிறார்.

அங்கிருந்த நண்பர்கள் வட்டத்தில் கார்ல் கொண்டாடப்பட்டாலும் ரூகே அவரைப் பற்றி இப்படி எழுதினார்.

He has a peculiar personality..He reads a lot works with unusual intensity, critical talent..but he finishes nothing, breaks off everything and plunges himself ever afresh into an endless see of books...He is irritable, hot tempered when worked himself sick and not gone to bed for three or four nights on end.

Vorwarts Group writers என்று ரூகே, ஹெயின், மார்க்ஸ், ஹெர்வே, பகுனின், வீர்த், எங்கெல்ஸ், பார்ன்ஸ்டெயின் போன்றவர் இருந்தனர். நண்பர்கள் குழுவில் இருந்த 14 பேர்களும் புகைமண்டலம் மத்தியில் இரவு முழுக்க விவாதிப்பவர்களாக பாரிசில் இருந்தனர்.

மார்க்ஸ் தனது பத்திரிகை தொடர்பான பணிகளை நிறுத்திக்கொண்டாலும் Jahrbucher ல் வந்த எங்கெல்சின் outlines of Critique of political economy என்பதை விருப்பத்துடன் படித்தார். எங்கெல்ஸ் தனது ஊருக்கு செல்லும் வழியில் பாரிசில் மார்க்சை சந்தித்து ஆக 28 முதல் செப் 6, 1844 நாட்களில் உரையாடினார். இதன் பின்னர் இருவரும் வாழ்நாள் பந்தப்பட்ட தோழர்களாயினர்.

மீண்டும் வோர்வார்ட்ஸ் பத்திரிகைக்கு எழுதுவது, ஜெர்மன் உழைப்பாளிகளிடம் உரையாடுவது என்பதாக மார்க்ஸ் நாட்கள் நகர்ந்தன. இது குறித்து பாயர்பாகிற்கு எழுதும்போது மார்க்ஸ்

German artisans- communists several hundreds had been attending twice weekly lectures on the Essence of Christianity என பாயர்பாக் புத்தகம் குறித்த வகுப்புகளை தான் எடுத்ததைச் சொல்கிறார்.

பாரிஸ் நகரில் மார்க்ஸ் குடும்பத்தால் நீடிக்க முடியவில்லை. அங்கிருந்து அவர்களை வெளியேற்ற பிரஷ்யா அரசாங்க அழுத்தம் வந்தது. டிசம்பர் 1844ல் ரூகே போன்றவர்களுடன் கார்ல் வெளியேற்றப்படுகிறார். கார்ல்க்கான Brussels Exile 1845ல் துவங்குகிறது.

பார்க்கலாம் மேலும் நடப்பதை..

## 8

முன்னரான 7 பதிவுகளில் மார்க்ஸ் பிறந்த சூழல், அவரது குடும்பம், பள்ளி கல்லூரிக் காலம், ஜென்னியின் குடும்பம், ஜென்னி மார்க்ஸ் காதல் திருமணம், மார்க்ஸின் பள்ளிச்சூழல் சிந்தனைகள், இளம் ஹெகலிய தாக்கம், பாயர்பாக் தாக்கம் - பிரான்சின் சோசலிச கம்யூனிச சிந்தனைகளின் தாக்கம் குறித்து ஓரளவு சொல்லப்பட்டது.

இந்தப்பதிவில் பிரஸ்ஸல்ஸ் வாழ்க்கைக் காலத்தைப் பார்ப்போம். குடும்பத்துடன் மார்க்ஸ் பிப் 3, 1845ல் அங்கு வந்து சேர்ந்தார். வந்தவுடன் குடும்பத்தை எப்படி அமைப்பது என்பதைவிட அங்கிருந்த புகழ்வாய்ந்த ஜெர்மானிய கவி ப்ரயிலிகிராத்தை உடன் பார்ப்பது என்ற ஆர்வமே மார்க்சிடம் இருந்ததாம்.

பிரான்சில் இருந்த தட்டுமுட்டுச் சாமான்கள் விற்ற பணத்தைகொண்டு அன்றாட பிரஸ்ஸல்ஸ் வாழ்க்கையை ஜென்னி துவங்கினார். செப்டம்பர் 26, 1845 ல் இரண்டாவது மகள் லாரா பிறந்தாள். இரு குழந்தைகளின் சத்தத்தால் மார்க்ஸ் சிந்தனைப் பணிகள் தடைபடாமல் இருக்க மாடி அறை அவருக்கான ஏற்பாடனது.

எங்கெல்ஸ் உடன் மார்க்ஸ் மான்செஸ்டர் சென்றதால், தாய் கரோலின் டிரயர் வீட்டிற்கு ஜென்னி சென்றார். அப்போது மார்க்ஸின் குடும்பத்தாரையும் ஜென்னி சென்று பார்த்தார். குழந்தை ஜென்னிக்கு அத்தை சோபி அழகான முத்தம் கொடுத்து கொஞ்சிய செய்தி கிடைக்கிறது.

1844ல் ஹெஸ் ஆக்கத்திலிருந்தும் தமது ஆய்வுகளின் வழியேயும் Manuscripts ல் மார்க்ஸ் கவனம் செலுத்தி வந்தார். ஹெஸ்ஸிடமிருந்து மனிதனின் conscious life activity என்பதை சரடாக எடுத்துக்கொண்டு அந்நியமாதல் கருத்தாக்கம் நோக்கி தன் சிந்தனைகளை மார்க்ஸ் நகர்த்தினார். Religious estrangement occurs only in the realm of consciousness, but economic estrangement is that of real life என அவர் வாதிட்டார்.

1844 ஜூன் காலத்திற்குள் political economy அரசியல் பொருளாதாரம் குறித்த 9 நோட்டு புத்தக குறிப்புகளை அவர் எடுத்து வைத்திருந்தாராம். அவ்வளவு உழைப்பு. கூலி, மூலதனம், வாடகை பற்றி முதல் குறிப்பு நோட்டு இருந்ததாம். அந்நியமாதல், உழைப்பு, தனிச்சொத்து, கம்யூனிசம், ஹெகல் பேசிய இயக்கவியல் என அனைத்தும் பற்றிய குறிப்புகளாக அவை இருந்தனவாம். 1844ல்

மார்க்ஸ் labour - labour power வேறுபாடுகளில் அதிக கவனப்படுத்தி பேசவில்லை. பின்னர் 1857-58 களில்தான் அவை குறித்த விளக்கங்களை அவரிடம் காண்கிறோம் என ஜோன்ஸ் சொல்கிறார்.

அரசியல் பொருளாதார ஆய்வுகளை தீவிரமாக்கிய மார்க்சிடம் ஆரம்பத்திலேயே இந்தக் கருத்து சேர்ந்துவிட்டதைக் காண்கிறோம்.

The worker descends into a commodity, and that the poverty of the worker is in inverse proportion to the power and extent of his production... Estrangement related not only to the product of labour but also to the activity of labour itself..the worker puts his life into the object; but now his life no longer belongs to him but the object

The antithesis between property and lack of property was transformed into that between capital and labour, bourgeois and proletarian.

ஹெஸ் பழக்கத்தில் எங்கெல்ஸ் சோசலிச ஈர்ப்பை பெறுகிறார். தனது சொந்த தொழில் அனுபவங்களைக் கொண்டும் கள ஆய்விலும் அவர் 1845ல் The Condition and of Working Class in England எழுதுகிறார். தொழிலாளர் பின்னணியிலிருந்து வந்த அவரது காதல் தோழி மேரி இதற்கு பெரும் உதவியை செய்தார். மார்க்ஸ் Holy Family யை முடித்து அது மார்க்ஸ் எங்கெல்ஸ் பெயரில் வருகிறது.

1844ல் மாக்ஸ் ஸ்டிர்னர் எழுதிய The Ego and its Own வருகிறது. ஹெஸ் மற்றும் எங்கெல்ஸ் படித்துவிட்டு இதற்கு பதில் தரவேண்டும் என நினைக்கின்றனர். எங்கெல்ஸ் தன் கருத்தை மார்க்சிடம் சொல்கிறார். ஸ்டிர்னர் பாயர்பாக்கை தாக்கியதற்கு பதில் சொல்லவேண்டும் என மார்க்ஸும் நினைத்தார். 1845 ஜூனிற்குள் 300 பக்கங்களில் நீளமான விமர்சன பதிலை மார்க்ஸ் எழுதி வைத்திருந்தாராம். அலுப்பில்லாத அஞ்சாத தனக்கு சரி எனத்தோன்றுவதற்கான பெரும் உழைப்பை நாம் மார்க்சிடம் எப்போதும் காண்கிறோம்.

எங்கெல்ஸ் குறிப்பிடும்போது 1845 லேயே மார்க்சிடம் 'his materialist theory of history developed' எனச் சொல்கிறார். ஆனால் ஜோன்ஸ் இதற்கு விளக்கம் ஒன்றை தருகிறார். ஜோன்சின் வரிகள் முக்கியத்துவம் வாய்ந்தவை .

The supposed battle between idealism and materialism invoked by Engels was a late 19th century preoccupation. During his years in Paris and Brussels , Karl' s ambition was not to develop a 'materialistic conception' , but rather to construct a philosophical system that reconciled

materialism and idealism, and incorporated nature and mind without assigning primacy to one or the other.

மேற்கூறிய ஜோன்ஸ் வரிகள் கவனமாக படித்து புரிந்துகொள்ளவேண்டியவை எனக் கருதுகிறேன்.

9

முன்னரான 8 பதிவுகளில் மார்க்ஸ் தாய் தந்தை குடும்பம் பள்ளிக்கூடம் , ஜென்னி , திருமணம் , பத்திரிகை அனுபவம் , பாரிஸ் வாழ்க்கை குறித்த சில செய்திகளை கொடுத்திருந்தேன்.

பிரஸ்ஸல்சில் தான் பாயரையோ, ரூகேவையோ இன்னும் குறிப்பாக பாயர்பாகை சார்ந்து தன் அறிவுப்பயணத்தை நடத்தும் நிலையில் இல்லை என்பதை மார்க்ஸ் தெளிவாக்கினார்.

சுய உருவாக்கத்தின் வழியே தனது சொந்த உழைப்பின் வழியே உருவாகி வருபவன் மனிதன் என்பதை ஹெகல் தெளிவாக்கியதாக மார்க்ஸ் கூறினார். மனிதன் வெறும் இயற்கை ஜீவி மட்டுமல்ல மனித இயற்கை ஜீவி - மிருகங்களைபோல் அல்லது அவனால் இயற்கையுடன் தனது விருப்ப உறுதி கொண்டும் இயங்க முடிகிறது என்றார். வரலாறு என்பதை humanisation of nature through his conscious life activity and history was the process of man becoming Spies- being.. இந்த spies being என்பது பாயர்பாக் விளக்கம் சார்ந்தது. சுருக்கமாக மார்க்ஸ் இப்படி சொன்னதாக எடுத்துக்கொள்ளலாம்.

Human History might be understood as the continual and cumulative process of interaction between teleology and causality.

பாயர்பாக் ஆய்வுகளில் 1845ல் மார்க்ஸ் third thesisல் இவ்வாறு எழுதியதைக் காண்கிறோம்.

..that the materialist doctrine concerning the changing circumstances and upbringing forgets that circumstances are changed by men and that the educators must himself be educated.

கம்யூனிசம் என்பது மனிதன் முழு மனிதனாக தன்னிடமே வருவது என்ற புரிதலை இந்தக்காலத்தில் அவர் வெளிப்படுத்தினார். அது முழுமையாக வளர்ந்த naturalism equals humanism and fully developed humanism equals naturalism என எழுதியுள்ளார்.

இந்த materialist conception history என்பதை எங்கெல்ஸ், பிளக்கானோவ், காட்ஸ்கி போன்றவர்கள்தான் பேசினர் என்ற விமர்சனத்தை ஜோன்ஸ் வைக்கிறார். ஜோன்ஸ் இதை விளக்கும்போது மார்க்ஸ் முன்வைத்த வரலாறு குறித்த இந்த விளக்கத்தையும் தருகிறார்.

History is nothing but the succession of the separate generations, each of which uses the materials, the capital funds, the productive forces handed down to it by all preceding generations, and this, on the one hand, continues the traditional activity in completely changed circumstances and, on the other, modifies the old circumstances with a completely changed activity.

1846ல் ரஷ்யாவின் அறிவுஜீவி பாவல் அன்னன்காவிற்கு மார்க்ஸ் எழுதிய கடிதம் ஒன்றில் குறிப்பிட்ட உற்பத்தி முறை சூழலில் தொடர்பான சமுக கட்டுமானங்கள்- குடும்பம், வர்க்கங்கள் என தொடர்பான சிவில் சமூகம் அமைகிறது என்றும் அதற்கேற்ப அரசியல் சிஸ்டமும் இருக்கிறது என்றும் மார்க்ஸ் குறிப்பிடுகிறார்.

1847 ல் புருதோனுக்கான பதிலில் no antagonism no progress - முரண்பாடில்லையேல் முன்னேற்றமில்லை. Till now the productive forces have been developed by virtue of this system of class antagonism எனச் சொல்கிறார் மார்க்ஸ்.

அவர் ‘புனித குடும்பத்தில் ’ இந்த கேள்வியை எழுப்பினார். It is the question of what proletariat is, and what, in accordance with this being, it will be historically be compelled to do. இப்படி அவர் உழைப்பு உற்பத்தி நிகழ்வு ,முதலாளித்துவம் பாட்டாளி முரண், பாட்டாளிகள் தேடும் சோசலிசம் என்கிற இணைப்பை உருவாக்குவதைக் காண்கிறோம். ஜோன்ஸ் இங்கு குறிப்பிடும் வேறு ஒரு அம்சம் Karl did not endow his proletarians with individuality.

கார்ல் போலவே கிரன் என்பாரும் பான் பெர்லினில் படித்து தொழிலாளர்களை திரட்டியவர். அவர் எங்கெல்ஸ், ஹெஸ் ஆகியவர்களுடன் இணைந்து பணியாற்றியவர். அவர் anti state anti constitutionalist நிலைப்பாட்டில் இருந்தார். அவர் social movement in France and Belgium என்ற புத்தகத்தைக் கொணர்ந்தார். கல்வி, பெண்களின் விடுதலை என்பதை சோசலிசத்துடன் இணைத்துப் பேசினார். ஆனால் அரசியல் பொருளாதாரம் குறித்த விமர்சனம், தொழிலாளர் பாத்திரம் குறித்து கவனம் செலுத்தவில்லை என்பதாலும் , புருதானுடன் உறவுகொண்டார் என்பதாலும் விமர்சனத்திற்கு உள்ளானார்.

1846ல் பிரஸ்ஸல்ஸ் கரஸ்பாண்டிங் கமிட்டியில் சேர பலருக்கும் அழைப்பு விடுத்தார் மார்க்ஸ். புருதானுக்கும் அழைப்பு சென்றது. அவர் சேரவில்லை. இந்த அமர்வு ஒன்றில்தான் பலரும் குறிப்பிட்டு பதிவிட்டுள்ள வைட்லிங் மீதான மார்க்ஸின் கோப விமர்சனம் நடந்தது. அக்காட்சியை பாவல் அன்னன்கோவ் பதிவின்படி தான் பலரும் சொல்கின்றனர். மார்க்ஸ் விவாதத்தின் போதெல்லாம் அறியாமை எதிர்த்து எவ்வளவு கோபமடைகிறார் என்பது இதில் செய்தியாக உணர்த்தப்படுகிறது. பாவலின் பதிவிலிருந்து

Marx at the height of fury, slammed his fist down on the table so hard that the lamp of the table reverberated and tottered, and jumping up from his place, said at the same time: ignorance has never helped anybody...the meeting had ended. While Marx paced the room back and forth in extreme anger and irritation, I hastily bid him and his companion good bye.

அதேபோல் புருதானும் மார்க்சிற்கு முடிந்தவரை மரியாதையுடன் ஆனால் எச்சரிக்கை ஒன்றுடன் பதில் எழுதியதை ஜோன்ஸ் சொல்கிறார். மார்க்ஸ் குழுவினர் becoming apostles of a new religion, even if religion of logic or reason..Don't create a new theology like your countryman Luther எனச் சொல்லியிருப்பதைக் காண்கிறோம்.

இப்படி பாரிஸ், ஜெர்மன் அறிவுஜீவிகள் மத்தியிலான விவாதங்கள் பல நடந்து, மார்க்ஸ் தனது விமர்சன ஆற்றல் மூலம் மேலெழுந்து வருவதைக் காண்கிறோம்.

மேலும் மார்க்சின் வாழ்க்கை எப்படி போனது எனப் பார்ப்போம் .

## 10

முன்னரான 9 பதிவுகளில் மார்க்ஸ் தாய் தந்தை குடும்பம் பள்ளிக்கூடம் , ஜென்னி , திருமணம் , பத்திரிகை அனுபவம் , பாரிஸ் , பிரஸ்ஸல்ஸ் வாழ்க்கை குறித்த சில செய்திகளை கொடுத்திருந்தேன்.

1846ல் லண்டனில் செயல்பட்டுவந்த ஷாப்பர் குழுவினர் மார்க்ஸ் பிரஸ்ஸல்ஸ் குழுவுடன் இணைந்து மனிதகுல நன்மைக்கு பணியாற்றும் விருப்பத்தை தெரிவித்தனர். இந்த தொடர்புதான் கம்யூனிஸ்ட் மானிபெஸ்டோ உருவாக்கத்திற்கு உதவியது. இந்த புத்தகத்தில் லண்டன் ஜஸ்டிஸ் லீக் பின்னர் கம்யூனிஸ்ட் லீக் என மாற்றம் பெறுதல், 1848 ஜன-பிப் கம்யூனிஸ்ட் மானிபெஸ்டோவை மார்க்ஸ் எழுதுதல் விரிவாக பேசப்படவில்லை. முன்னர் எங்கெல்ஸ் கேள்வி பதில் வடிவத்தில் எழுதி அனுப்பிய நகல் குறித்தும் விரிவாக பேசவில்லை.

மானிபெஸ்டோ பிப் 1848ல் வந்த பின்னரும், மார்ச் 24ல் Demands for Communist Party of Germany என்ற பெயரில் மார்க்ஸ், ஷாப்பர், எங்கெல்ஸ், மோல், உல்ப் போன்றோர் ஒன்றுபட்ட ஜெர்மனி என்ற முழக்கத்தை வைத்தனர். வங்கி, போக்குவரத்து தேசியமயம், வரிவிதிப்பு சீர்திருத்தம் கோரினர்.

ஸ்டீபன் பார்ன் என்பார் 1847ல் மார்க்ஸ் வீட்டிற்கு சென்ற தன் பதிவைச் சொல்லியுள்ளார். ஜென்னி எப்போதும் தன் கணவரின் நலன் என்பதில் கவனமாக இருந்தார், பிரஸ்ஸல்ஸ் ஜெர்மானிய பெண்களுக்கு கல்வி கற்பிக்கும் கழகத்தில் ஆர்வத்துடன் செயல்பட்டார் ஜென்னி , 1847 புத்தாண்டில் 130 பேர் கூடிய நிகழ்வில் தனது ஜென்னி தனது dramatic talentயைக் காட்டினார் எனவும் அவர் எழுதியதைக் காண்கிறோம்.

1846 டிசம்பரில்தான் ஜென்னி எட்கரை பிரசவித்திருந்தார். ஆனால் அக்குழந்தை பிறந்ததிலிருந்து நோய்வாய்ப்பட்டிருந்தது. 9 ஆண்டுகள் வாழ்ந்து போராடி எட்கர் மரித்தான்.

ரஷ்யத் தோழர் பாவல் அன்னன்கோவ் மார்க்ஸ் பற்றி இவ்வாறு குறிப்பிட்டார்.

”அற்புத சக்தியுடன், உறுதிப்பாட்டுடன், தன் சிந்தனையில் பெரும் நம்பிக்கையுடன், கருப்பு தலைமயிர்- கைகளில் முடியுடன் மார்க்ஸ் இருந்தார். பட்டன்களுடன் கோட் அணிந்திருப்பார். பார்வையில் எவருக்கும் அவர் மீதான மரியாதை எழும். அவரது அசைவுகளில் நேர்த்தி இருக்காது- awkward but self confident. அவர் பேசத்துவங்கினால் தெளிவான அறிவிப்புகளாக அவை இருக்கும். சுற்றி நிற்பவர்களின் மூளைகள் அவரது கட்டுப்பாட்டில் இருக்குமாறு அவரது சிந்தனை மிளிரும். அவர் democratic dictator incarnate என பாவல் தன் பதிவில் சொல்வதைக் காணலாம்.

பொதுவாக குழாமில் மார்க்ஸ் சொல்வது ஏற்கப்படும். ஹெஸ் ஏங்கெல்ஸ் இருவரும் விவாதத்தில் ஈடுபடுவராம். கேலி பேச்சுக்களும் நண்பர்கள் மத்தியில் இருக்குமாம். நாம் பாட்டாளிகள் போல் ஆகவில்லையெனில் சுவர்க்கத்திற்கு செல்லமுடியாது போன்ற நகைச்சுவை உணர்வுகளும் அவர்களிடம் இருக்குமாம்.

1846-47 களில் எங்கெல்ஸ் ஹெஸ் தகராறு சற்று கூடுதலாக இருந்ததை ஜோன்ஸ் சொல்கிறார். ஹெஸ்ஸை சீண்டுவதை எங்கெல்ஸ் செய்வாராம். ஹெஸ் துணைவியார் Sybille இடம் எங்கெல்ஸ் அத்து மீறிய குற்றச்சாட்டு வந்தது. ஜோன்ஸ் இதை இவ்வாறு எழுதியுள்ளார்.

Hess accused Engels of rape and spoke of challenging him to a duel. Engels' attitude was callous..

1847 ல் பாரிசில் இருந்தபோதும் , பாரிஸ் பெண்களுடன் மகிழ்ச்சியாக இருந்த செய்தியை எங்கெல்ஸ் மார்க்ஸிடம் தெரிவித்தையும் காண்கிறோம். If there were no French women, life wouldn't be worth living என எழுதியதை ஜோன்ஸ் மட்டுமல்ல பலரும் சுட்டிக்காட்டியுள்ளனர். Take it easy policy என எங்கெல்ஸ் இருந்ததாகச் சொல்கின்றனர்.

ஜெர்மன் தொழிலாளர்களுக்கு தத்துவத்தின் வறுமை, கூலி உழைப்பு, மூலதனம் குறித்த விரிவுரைகளை மார்க்ஸ் பிரஸ்ஸல்ஸில் தந்தார். முதலாளித்துவ உற்பத்தி முறை குறித்து பேசினார். சுதந்திர வர்த்தகம் என்பதை விமர்சித்தார். பிரஸ்ஸல்ஸ் கம்யூனிஸ்ட் லீக் என்ற பெயரில் அரசியல் நடவடிக்கைகளை அவரது குழுவினர் கவனித்து வந்தனர். பொதுவாக வகுப்புகள் புதன்கிழமைகளில் இருக்குமாம்.

பெல்ஜியன் அசோசியேசன் என்கிற ஜனநாயக அமைப்பினருடனும் மார்க்ஸ் செயல்பட்டார். 1848 ஜனவரியில் மானிபெஸ்டோவில் அவர் கவனம் செலுத்தினார். ஜோன்ஸ் இங்கு சொல்வது பல நூல்களின் சாரத்திலிருந்து பிழிந்த வடிவமாக கம்யூனிஸ்ட் அறிக்கையை மார்க்ஸ் தந்தார் என்று. எங்கெல்ஸின் principles, condition of working class in England, the poverty of philosophy, articles of Moses Hess, German ideology குறிப்புகள் என ஜோன்ஸ் பட்டியல் இடுகிறார். ஜோன்ஸ் அதன் சிறப்பை ஏற்கிறார்.

The Manifesto is still rightly celebrated as Karl's most memorable text எனச் சொல்கிறார்.

புகழ்வாய்ந்த டாக்டர் அந்த்ரே கோட்ஸால்க் உடன் உறவு, முரண் என்ற அம்சத்தையும் ஜோன்ஸ் ஓரளவு தொட்டுக்காட்டியுள்ளார்.

1848 பிப்ரவரி புரட்சிகர பாரிஸ் நிகழ்வுகள் பிரஸ்ஸல்சில் எதிரொலித்தன. போலீஸ் நெருக்கடி மார்க்ஸ் குடும்பத்தின் மீது விழுந்தது. கார்ல் கைது செய்யப்பட்டு வெளியேற நேர்ந்ததுடன்,ஜென்னியை மோசமாக நடத்திய நிகழ்வும் நடந்தேறியது. மார்க்ஸ் இதை

My wife under the charge of vagabondage, was taken to prison and locked up in a dark room with prostitutes என துயரத்துடன் எழுதியதை காணலாம்.

நிச்சயமற்ற மார்க்சின் வாழ்க்கை அடுத்து கலோன் நோக்கி நகர்ந்ததைப் பார்ப்போம்.

## 11

முன்னரான 10 பதிவுகளில் மார்க்ஸ் தாய் தந்தை குடும்பம் பள்ளிக்கூடம் , ஜென்னி , திருமணம் , பத்திரிகை அனுபவம் , பாரிஸ் , பிரஸ்ஸல்ஸ் வாழ்க்கை , எங்கெல்ஸ்- ஹெஸ் முரண்கள் குறித்த சில செய்திகளை கொடுத்திருந்தேன்.

நிச்சயமற்ற துரத்தப்பட்ட வாழ்க்கைப் பயணத்தில் மார்க்ஸ் 1848 ஏப்ரலில் cologneக்கு வந்தார். எங்கெல்ஸ் கூடவே துணையாக வந்தார். அங்கு அடால்ப் கிளஸ் நண்பர்களுடன் தொழிலாளர் அசோசியேஷன் உறவுகளை மார்க்ஸ் உருவாக்கிக்கொண்டார். ஜெர்மன் நாடாளுமன்றத்திற்கு தொழிலாளர் நலன் காக்கும் பிரதிநிதிகள் தேவை என்ற அறிக்கைகளை தோழர்கள் வெளியிட்டனர்.

கலோன் நகர் சுற்றி 90 ஆயிரம் மக்கள் 1840களில் வாழ்ந்தனர். தொழிலாளர்கள் கணிசமாக இருந்த பகுதி. 30 சத மக்கள் ஏழைகள். வேலையின்மை 25 சதம் இருந்ததாம். டாக்டர் கோட்ஸ்சாக் ஜனநாயக சோசலிஸ்ட்களின் கிளப் ஒன்றை துவக்கினார். Freedom, brotherhood, work என்ற முழக்கங்களுடன் பத்திரிகையும் நடத்தினார். ஆனால் அவர் மார்க்ஸ் தோழர்கள் பேசிய ஏக ஜெர்மனி என்பதை ஏற்கவில்லை. பெடரல் ஜெர்மனிக்காக நின்றார். அதேபோல் அரசியல் அமைப்பு முடியரசு என்பதே சாத்தியம் எனக் கருதினார். கோட்ஸ்சால்க் குழுவிடம் 7000 மெம்பர்கள் இருந்தால், மார்க்ஸ் செயல்பட்ட ஜனநாயக குழுவில் 700 பேர் இருந்தனராம்.

மார்க்ஸ் நண்பர்கள் ஜூன் 1848ல் தங்கள் 'நியு ரையினிஷ் ஜெய்துங்' பத்திரிகையைக் கொணர்ந்தனர். லீக் தோழர்கள் கொண்ட - எங்கெல்ஸ், வீர்த், உல்ப் உள்ளிட்டவர் எடிட்டோரியல் குழுவில் இருந்தனர். கார்ல் ஜெர்மன் அரசியல் நிகழ்வுகளை, எங்கெல்ஸ் வெளி உலக செய்திகளை, வீர்த் இலக்கிய பகுதியை பார்த்துக்கொண்டனர். கோல்ஸ்சாக் பத்திரிகை 17 ஆயிரம் விற்றால், நியு ரையினிஷ் 5000 அளவில் போனதாம்.

பாரிசில் மார்ச் 17 ல் இரகசிய இயக்கத்தலைவர் பிளாங்கி அழைப்பில் லட்சம் பேர் பங்கேற்ற ஆர்ப்பாட்டம் நடந்தது. ஏப்ரலில் அரசியல் அசெம்பிளிக்கு நடந்த தேர்தலில் இடதுகளைவிட மிதவாதிகள் கூடுதலாக வந்தனர். சோசலிஸ்ட்களாக

அறியப்பட்டவர்கள் தற்காலிக அரசில் இடம்பெறவில்லை. மார்க்ஸ் தொழிலாளர் எழுச்சியை விதந்து பத்திரிகையில் எழுதினார்.

ஜோன்ஸ் இங்கு மார்க்ஸின் எழுத்துக்களில் certain incoherence as a result of riding in two horses the democratic and proletarian socialist இருந்ததை சுட்டிக்காட்டுகிறார். மார்க்ஸ் தோழர்களால் முழுமையாக தங்கள் பத்திரிகைகளில் ஜனநாயகம் என்ற முழக்கத்தை கைவிட முடியாத சூழல் இருந்ததைக் காண்கிறோம். புதிய அரசு பிப்ரவரி எழுச்சியின் தாக்கத்தை குறைக்கும் வகையில் right to work போன்றவற்றை ரத்து செய்தது.

பிரசிடெண்ட்க்கான தேர்தலில் நெப்போலியன் குடும்பம் சார்ந்த லூயிஸ் நெப்போலியன் போனபார்ட் அமோக வெற்றி பெற்றார். அமைச்சரவையில் ரிபப்ளிகன் என எவரும் சேர்க்கப்படவில்லையாம். பாரிசில் செயல்பட்ட ராடிகல்ஸ் என கருதப்பட்டவர்கள் தங்களை தற்காத்துக்கொள்ளவே போராடவேண்டிய நிலை உருவானது.

ஜெர்மனில் என்னவானது என பார்ப்போம்…

கடந்த 11 இடுகைகளில் ஜோன்சின் பார்வையில் மார்க்ஸ் வாழ்க்கைப்பயணம் குறித்த செய்திகளை எனக்குத் தோன்றிய அளவில் எடுத்து தந்துள்ளேன். இந்தப் புத்தகத்தை இதைவிட சிறந்த வழிகாட்டும் புத்தகம் வேறில்லை என எகனாமிஸ்ட் பத்திரிகை குறித்த செய்தியையும் தந்திருந்தேன். அடுத்து ஜெர்மனியில் என்னவென பார்ப்போம்.

1848 மார்ச்சில் ஜெர்மனியில் 1813 நெப்போலியன் எதிர்த்த நினைவுகளை பிரஷ்ய மன்னர் நினைவு கூர்ந்ததுடன், நாடாளுமன்றம் லிபரல்களும் பங்கேற்கும் வகையில் அமையும் என அறிவித்தார். செப்டம்பரில் அமைச்சரவை ஏற்பட்டு நெருக்கடி தற்காலிகமாக தீர்க்கப்பட்டது. கலோனில் மார்க்ஸ் உள்ளிட்ட நியுரையினிஷ் பத்திரிகைகாரர்கள் ஜனநாயக சொசைட்டியில் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஆனாலும் கலோன் நகர அதிகாரிகள் அனுமதிக்கும்வரை அங்கு கார்ல் இருக்கலாம் என்ற நிச்சயமற்ற நிலையே நீடித்தது.

மார்க்ஸ் ஜனநாயக சொசைட்டி, தொழிலாளர் அசோசியேஷன், பொதுபாதுகாப்பு கமிட்டி ஆகியவற்றில் செயல்பட்டுக்கொண்டிருந்தார். இந்த இயக்கங்கள் ஆர்ப்பாட்ட அறைகூவலை விடுத்தன. ஹெஸ், எங்கெல்ஸ், ஷாப்பர், உல்ப் போன்றவர்கள் டெமாக்ரடிக் காங்கிரஸ் நடைபெற இருந்த சூழலில் செப்டம்பர் 1848ல் கைதாகும் நிலை ஏற்பட்டது. கார்ல் தொழிலாளர்கள் அவசரப்பட்டு நடவடிக்கையில் இறங்கவேண்டாம் என்ற அறிவுரையை தந்தார். செப் 26 ல் இராணுவ சட்டம் பிரகடமானது. அக்டோபர் மத்தியிலேயே பத்திரிகை பணிகள் பாதிக்கப்பட்டன.

1848 நவம்பரில் தனது சொந்த மாமாவின் தலைமையிலான அமைச்சரவையை மன்னர் அமைத்தார். கார்ல் மற்றும் தோழர்கள் நவம்பர் 15ல் வரிகொடா வேலை நிறுத்தம் என அறைகூவல் விடுத்தனர். அசெம்பிளியை முடக்க அரசர்க்கு உரிமையில்லை என்ற ஆர்ப்பாட்டம் பெருமளவு நடந்தது. No tax இயக்கத்திற்கு ஆரம்பத்தில் ஆதரவு இருந்தாலும் அது பரவலான ஆதரவைப் பெறவில்லை. மார்க்ஸ் இப்படி எழுதினார்

If the Govt continues in this way, we shall have convention not merely for Prussia but for whole Germany- a convention to use all means to cope with civil war..and with inevitable war with Russia.

Recognition of National Assembly என்பதில் அவர் அழுத்தம் சென்றதைக் காண்கிறோம்.

1848ல் இறுதி மாதங்களில் ஏற்பட்ட அனுபவத்தில் மார்க்ஸ் ஜெர்மனியில் அரசமைப்பு என்பது முடியாட்சியுடன் என்பதாகவே இருக்கிறது- social republican revolution சாத்தியமாகாது போலவே இருக்கிறது என எழுதியதைக் காண்கிறோம்.

நியுரையினிஷ் வேலைகளை செப்டம்பர் 1848லிருந்து 1849 ஜனவரிவரை தனி மனிதராக கார்ல் மார்க்சே சுமக்க வேண்டியிருந்தது. எங்கெல்ஸ் தப்பியதுடன் நடந்தே பாரிஸ் சென்றார். மோல் லண்டன் சென்று கம்யூனிஸ்ட் லீக் செயல்பட வைக்க முயன்றார். பத்திரிகை நிதிக்கு கடன்கள் பெறப்பட்டன. நிதி கிடைப்பது கடினமானது.

பிரஷ்யா அசெம்பிளி தேர்தல் அறிவிக்கப்பட்டது. மார்க்ஸ் மற்றும் நண்பர்கள் ஜனநாயக வேட்பாளர்களை ஆதரித்து பிரச்சாரம் செய்தனர். ஏழைகள் இல்லாத அனைத்து ஆண்களுக்கும் ஓட்டுரிமை இருந்தது. தொழிலாளர் நேரடி வேட்பாளர் என்ற கருத்தை வேண்டாம் என சூழலைக் கணக்கில்கொண்டு மார்க்ஸ் நிராகரித்திருந்தார் என்பதையும் இங்கு நாம் பார்க்கிறோம். அரசாங்கத்தை எதிர்க்கும் போராட்டத்தில் எங்கள் பகைவர்களுடன் கூட அணிசேர்வோம் என நியுரையினிஷ் எழுதியது.

பிரான்சில் என்ன நடந்தது எனப் பார்ப்போம்…

## 13

முன்னரான 12 பதிவுகளில் மார்க்ஸ் தாய் தந்தை குடும்பம் பள்ளிக்கூடம் , ஜென்னி , திருமணம் , பத்திரிகை அனுபவம் , பாரிஸ் , பிரஸ்ஸல்ஸ் , கலோன் வாழ்க்கை , எங்கெல்ஸ்- ஹெஸ் முரண்கள் குறித்த சில செய்திகளை கொடுத்திருந்தேன்.

ஆயுத எழுச்சி எதிர்பார்த்த மார்க்ஸ் எங்கெல்ஸ் கலோனிலிருந்து பாடென்-பாலடினேட் சென்றனர். அங்கு இடதுசாரிகளை தங்கள் புரிதலுக்கு தயார் செய்ய விழைந்தனர். இதற்கிடையில் 1849 மே மாதம் மாஜினி போன்ற போராளிகளை பாரிசிலிருந்து வெளியேற்ற போனபார்ட் முடிவெடுத்தார். பாரிஸ் வாழ் ஜெர்மானியர் மீது போலீஸ் கண்காணிப்பு தீவிரமானது. இனி பாரிசில் இருக்கமுடியாது என்ற நிலையில் இங்கிலாந்து லண்டன் செல்ல மார்க்ஸ் முடிவெடுத்தார். ஜென்னி குழந்தைகளுடன் செப்டம்பர் 1849ல் அங்கு வந்து சேர்ந்ததை அறிகிறோம்.

ஆகஸ்டில் லண்டன் வந்தது துவங்கி கம்யூனிஸ்ட் லீகின் மத்திய கமிட்டியை செயலூக்கமாக்கிட மார்க்ஸ் முயன்றார். அதன் தலைவராக அவர் எங்கெல்ஸ், ஷாப்பர், வில்லிக் போன்றவர்களை இணைத்துக்கொண்டார். ஜெர்மன் அகதிகளுக்கான சோசியல் டெமாக்ரடிக் சப்போர்ட் குழு ஒன்றை அமைத்தனர். ஒர்க்கர்ஸ் எஜுகேஷனல் அசோசியேஷனில் கூடி திட்டமிட்டனர். செருப்பு கடைக்காரர் ஹெயின்ரிச் பாயரை ஜெர்மன் சுற்றுப்பயணம் அனுப்பி ஆதரவு தேடினர். சிகரெட் தயாரிப்பாளர் பீட்டர் ரோசர் மூலம் கலோன் கிளையை செயல்பட வைத்தனர்.

மார்ச் 1850ல் மார்க்ஸ் எழுதி எங்கெல்ஸ், வில்லிக் உட்பட்டவர் கையொப்பத்துடன் Address to the Central Authority of League எனும் அறிக்கை வெளியானது. எதிர்காலத்தில் அரசு அதிகாரத்திற்கு நேரடி போராட்டத்தில் பிரான்ஸ், பிரிட்டன் பாட்டாளிகள் தயாராகவேண்டும். ஜெர்மன் நிலை வேறு. அங்கு முதலில் பூர்ஷ்வா புரட்சி, இரண்டாவதாகத்தான் பாட்டாளி புரட்சி என அதில் அவர்கள் மதிப்பிட்டிருந்ததைக் காண்கிறோம். Workers battle cry must be : The

Revolution in Permanence என மார்க்ஸ் எழுதியதைக் காணலாம். இந்த நிரந்தர புரட்சி எனும் முழக்கத்தை பின்னாட்களில் டிராட்ஸ்கி எடுத்து கையாண்டதை அறிவோம்.

1850 ஜூலையில் தொழிலாளர்களுக்கு விரிவுரைகளை மார்க்ஸ் வழங்கிக்கொண்டிருந்தார். செப்டம்பர் 15 ல் மத்தியக்குழு கூட்டப்பட்டதாம். அதில் power at once எனப்பேசிய ஷாப்பர் வில்லிக் விமர்சிக்கப்பட்டனராம். 15, 20 ஆண்டுகள் சிவில் யுத்தம் தேவைப்படலாம் என மார்க்ஸ் ஊகித்துள்ளார். லண்டன் கிளையில் கருத்து வேறுபாடு முற்ற 1852 நவம்பரில் மார்க்ஸ் அதை கலைத்து விடுகிறார்.

1851ல் தையல் தொழிலாளி நோத்ஜங் என்பார் கலோன் ஆய்வுத்தாள்கள் சிலவற்றை வைத்திருந்தார் என கைது செய்யப்பட்டாராம். கலோன் கம்யூனிஸ்ட்களுக்கு வில்லிக் அனுப்பிய கடிதங்கள் போலீசாரால் கைப்பற்றப்பட்டன. ஜெர்மனியின் மன்னர் பிரடெரிக் வில்ஹெல்ம் 4 க்கு லண்டனில் மார்க்சிய குழு ஒன்று செயல்பட்டு வருவது கண்ணை உறுத்தியதாம். ஏற்கனவே 1851ல் தொடர்புடைய 11 தோழர்கள் மீது வழக்கு நடைபெற்று வந்தது. கிரிமினல் குற்றம் என ஏதும் நிருபிக்கப்படவில்லை. ஜோன்ஸ் இதைக் குறிப்பிடும்போது on Oct 4, 1852 the police forged documents to incriminate the 'Marx Party' ..four were acquitted, rest imprisonment for three to six years.

இது குறித்து மார்கஸ் 1853 ஜனவரியில் சிறு வெளியீடு கொணர்ந்தார்- Revelations concerning the Communist Trail in Cologne . பல பிரதிகள் பறிமுதல் செய்யப்பட்டன.

நம்பிக்கை தளராத மார்கஸ் லண்டனில் பத்திரிகை ஜெர்மானிய மொழியில் துவங்கலாம் என எங்கெல்சிற்கு எழுதுகிறார். தியோடர் ஹேகன் என்கிற லீக் உறுப்பினர் உதவியுடன் மாதாந்திர பத்திரிகை நியுரையினிஷ் ஜெய்துங் அரசியல் பொருளாதார இதழ் என முடிவானது .

14

ஜோன்ஸ் தனது நூலின் கடைசிப் பகுதியில் மார்க்ஸ் எங்கெல்ஸ் நூல்தொகைகள் அடுக்கப்பட்ட சிறு வரலாற்று குறிப்பை தந்திருப்பார். அதிலிருந்து சில பகுதிகள்..

மார்க்ஸ் 1883ல் மறைந்த பின்னர் அவரது எழுத்துக்கள் அவரின் வாழ்நாள் தோழர் எங்கெல்ஸ் வசமானது. எங்கெல்ஸ் அதை மார்க்சின் கடைசி மகள் எலியனார் ( டஸ்ஸி) வசம் ஒப்படைத்தார். எலியனார் 1898ல் மறைந்தார். மற்றொரு மகளான லாரா லபார்க்கிடம் சில பேப்பர்ஸ் இருந்தனவாம். இந்த மகள்தான் பிரான்ஸ் மெரிங் 1914ல் மார்க்ஸ் வாழ்க்கை வரலாறு எழுத கிரியாவூக்கியாக இருந்த பெண்மணி.

எங்கெல்ஸ்1895ல் மறையும் போது அவரது எழுத்துக்கள் பலவற்றிற்கு ஜெர்மன் சமூக ஜனநாயக கட்சி பொறுப்பேற்றுக்கொண்டது. ஆகஸ்ட் பெபல், எட்வர்ட் பெர்ன்ஸ்டைன் இருவரும் அதற்கு டிரஸ்டியாக்கப்பட்டிருந்தனர். இக்கட்சியால் 1910ல் தான் பெர்லின் எங்கெல்ஸ் கிடங்குடன் மார்க்சின் பேப்பர்களையெல்லாம் கொண்டுவந்து சேர்க்க முடிந்ததாம்.

இந்தக் காலத்தில் ஆஸ்ட்ரோ மார்க்சியர்கள் கூடி மார்க்ஸ் எங்கெல்ஸ் தொகுப்புக்களை கொணர்வதன் அவசியத்தை உணர்ந்தனர். ஆனால் அவர்களால் முடியாமல் போனது.

ரஷ்ய அக்டோபர் புரட்சிக்குப் பின்னர் சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி ஆமோதிப்புடன் டேவிட் ரியாஷ்னாவ் மாஸ்கோவில் இதற்கான பெரும் முயற்சியை உழைப்பை நல்கினார். 1920ல் இந்த முயற்சி துவங்கப்பட்டது. அவர் திட்டப்பணிப்படி 42 தொகுப்புகள் என்ற எண்ணம் இருந்தது. Historisch Kritische Gesamtausgabe என்ற பெயரில் 12 வால்யூம்கள் அவரால் கொண்டுவர முடிந்தது. 1927 முதல் இந்த வால்யூம்கள் வரத்துவங்கின. நாம் எல்லாம் சுருக்கமாக அறிந்த பெயரில் சொல்வதென்றால் அந்த தொகுப்புகள் MEGA என்பதாகும்.

டேவிட் ரியாஷ்னாவ் ஸ்டாலினுக்கு அசௌகரியமாக இருந்த வகையில் கொல்லப்பட்டவர்களில் ஒருவர் என்பது வேறு கதை.

ஜெர்மன் சமூக ஜனநாயக கட்சிக்குள் வேறுபாடுகள், சோவியத் கட்சிக்கும் அதற்குமான வேறுபாடுகளால் இந்தப் பணி நின்றும் போனது.

மார்க்ஸ் எங்கெல்ஸ் பேப்பர்கள் பல ஹாலந்து, இங்கிலாந்து என இரண்டாம் உலகப்போர் காலத்தில் எடுத்துச் செல்லப்பட்டு பத்திரப்படுத்தப்பட்டனவாம்.

1956 ஸ்டாலின் மறைவிற்குப் பின்னர் அந்த MEGA வை புதுப்பித்து கொணரலாம் என்ற எண்ணத்தை மாஸ்கோவின் பெர்லின் Institute of Marxism Leninism ம் சேர்ந்து எடுத்தனர். ஆனால் பேப்பர்கள் ஒரே இடத்தில் இல்லை. ஆம்ஸ்டர்டாமில் பெருமளவும், மாஸ்கோவில் சிறிதளவும் இருப்பதை அவர்கள் உணர்ந்தனர். இன்னொரு முக்கிய பிரச்சனையாக நூல்தொகுப்பு முற்றிலும் சோவியத் கட்சி கட்டுப்பாட்டில் வெளியிடப்படவேண்டும் என்பது வந்தது. அதை அன்றைய சூழலில் எவராலும் தவிர்க்கமுடியாது என சமரசம் செய்துகொண்டு 1972 முதல் 1991 காலத்தில் 66 தொகுப்புகளை கொணர்ந்தனராம்.

ஜோன்ஸ் தரும் எச்சரிக்கை MEGAவில் 1990க்கு முன்னர் வந்தவை குறித்து

But the publication of each volume continued to be conceived in a Marxist Leninist Frame work. This means that the entire MEGA series before 1990s to be treated with some caution. Not only were there politically inspired omissions, but in some important instances- the 1844 Manuscripts or the German Ideology for instance- published volumes suffered from distortion of the organisation, intention, status of the texts

மற்றொரு முயற்சி MEW Marx Engels Worke என்பதாகும். பெர்லின் தோழர்களும் முயற்சியால் 1956 முதல் 1990 காலத்தில் வெளியான 43 தொகுப்புகள். பரவலான வாசகர்களை சென்றடையும் வகையில் தொகுத்தோம் என்று அத்தோழர்கள் இதைக் கொணர்ந்தனராம்.

அடுத்த முயற்சியாக MECW என்கிற Karl Marx and Friedrich Engels Collected Works மாஸ்கோ, லண்டன், நியுயார்க் என பல்வேறு இடங்களில் 1975 முதல் 2000 வரை 50 நூல் தொகைகளாக வெளியிடப்பட்டன. இது மார்க்ஸ் குறித்து lay man கூட அறிந்துகொள்ள ஏதுவாக அடுக்கப்பட்டதாக கூறினர். இந்த நூல்தொகைகளும்

அங்குள்ள கம்யூனிஸ்ட் கட்சிகளின் மேற்பார்வையில்தான் கொணரப்பட்டன. எனவே ஜோன்ஸ் இங்கும் தனது எச்சரிக்கையை வைத்துவிடுகிறார். நூறு சத reliability என்பதாகாது என்பது அவரின் கருத்து.

பெர்லின் சுவர் வீழ்த்தப்பட்ட, சோவியத் தகர்ந்து போன சூழலில் ஆம்ஸ்டர்டாம் இன்ஸ்டிட்யூட், மார்க்ஸ் பிறந்த டிரயர் பகுதி அமைப்பு, அய்ரோப்பிய ஆய்வு கவுன்சில் போன்றவை இணைந்து 2025க்குள் 114 நூல்தொகைகள் என்ற இலக்கில் செயல்பட்டு வருகின்றனராம். 5 ஆண்டுகளுக்கு முன்னர்வரை 62 தொகுதிகள் தயாரிக்கப்பட்டுள்ளது என்கிற செய்தியை ஜோன்ஸ் தந்துள்ளார்.

இப்படி நம்மிடம் ஆங்கிலத்தில் வந்து சேர்ந்துள்ள நூல்தொகைகள் எவ்வகை தொகுப்புகள் எனப் பார்த்து அதையும் நாம் எடுத்தாள்கையில் பதிவிட வேண்டும். நம்மிடம் வந்து சேர்பவையும் இப்படி பல வடிகட்டல்களுடந்தான் distillation வந்துள்ளன என்ற புரிதலும் சற்று நம்மை நிதானப்படுத்தி கருத்து பரிமாற்றத்தில் அழைத்துச் செல்லும்.

மே 2023